නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

05.08.2019 / 0830 – 1030

හින්දු ධර්මය I
இந்து சமயம் I
Hinduism I

42 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

- ✳ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
- ✳ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
- ✳ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
- ✳ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

● **1** தொடக்கம் **5** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** விடயங்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** ஏதோவொரு காரணத்தினால் ஏனையவற்றுடன் பொருந்தாது. **பொருந்தாததைத்** தெரிவுசெய்க.

**1.** (1) ஆரியபட்டர் (2) சரகர் (3) வசிஷ்டர் (4) புளிசர் (5) லலாடதேவர்

**2.** (1) கரகாட்டம் (2) காவடி (3) கோலாட்டம் (4) கூத்து (5) பரதம்

**3.** (1) இரகசியம் (2) உபநிடதம் (3) வேதசிரசு (4) தமிழாகமம் (5) வேதாந்தம்

**4.** (1) ஆயுஸ்ஜாணி (2) பௌஷ்டிகாணி (3) ஸ்திரிகர்மாணி
(4) ராஜகர்மாணி (5) அஷ்வமேத கர்மாணி

**5.** (1) சுந்தரர் (2) உரோமரிஷி (3) சிவவாக்கியர்
(4) அகப்பேய்ச்சித்தர் (5) பட்டினத்தார்

● **6** தொடக்கம் **10** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடி சொற்கள்** தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ளவை ஒன்றுடன் ஒன்று பொருந்தவில்லை. **பொருந்தாத** அச்சோடிச் சொல்லைத் தெரிவுசெய்க.

**6.** (1) சிலாபரீட்சணம் - கருங்கல்லைத் தெரிவுசெய்தல்
(2) மகோற்சவம் - பஞ்சகிருத்தியம்
(3) சாம்பவதீட்சை - சுவாமி வெளிவீதி வருதல்
(4) கொடிச்சீலை - திருவருட்சக்தி
(5) காமியக் கிரியை - பயன் அவாவிச் செய்தல்

**7.** (1) சிருஷ்டி - உடுக்கு ஏந்திய கரம்
(2) ஸ்திதி - வீசுகரம்
(3) சங்காரம் - தீ ஏந்திய கரம்
(4) திரோபவம் - ஊன்றிய திருவடி
(5) அநுக்கிரகம் - தூக்கிய திருவடி

**8.** (1) ஞானசம்பந்தன் - தருமபுர ஆதீனம்
(2) நமசிவாய மூர்த்திகள் - திருவாவடுதுறை ஆதீனம்
(3) சிவஞான முனிவர் - சிவஞானமாபாடியம்
(4) கச்சியப்ப முனிவர் - தணிகைப்புராணம்
(5) ஔவையார் - அதிசயமாலை

**9.** (1) ஐதரேய பிராமணம் - இருக்கு வேதம்
(2) சதபதப் பிராமணம் - சுக்கிலயசுர் வேதம்
(3) சாந்தோக்யப் பிராமணம் - சாமவேதம்
(4) கோபதப் பிராமணம் - அதர்வ வேதம்
(5) சட்விம்சப் பிராமணம் - கிருஸ்ணயசுர் வேதம்

**10.** (1) ஊடகம் - தகவல் தொடர்புச் சாதனம்
(2) ஓலைச்சுவடிகள் - மரபுவழிச் சாதனம்
(3) இறுவட்டு - தகவல் தொழில்நுட்பச் சாதனம்
(4) பொதுவிவாதம் - சொல்வழித் தொடர்புச் சாதனம்
(5) வானொலி - வெளிப்புறச் சாதனம்

- **11** தொடக்கம் **15** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **'அ'** **'ஆ'** என்னும் நிரல்களின் கீழ் சில விடயங்கள் தரப்பட்டுள்ளன. **'அ'** நிரலுக்கு ஏற்ற விதத்தில் **'ஆ'** நிரலில் உள்ள விடயங்கள் பொருத்தமாக ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

**11.**

| அ | ஆ |
|---|---|
| (i) சுக்கிலபட்சம் | A - முதுவேனில் |
| (ii) குஷ்டரோகம் | B - அறுவைச்சிகிச்சை |
| (iii) கிரீட்மம் | C - அமாவாசை |
| (iv) சுஸ்ருதர் | D - சுக்கில யசுர் |
| (v) தன்வந்திரி | E - அஷ்டாங்கம் |

(1) CDABE (2) CDBAE (3) CDEBA (4) EDABC (5) EDBCA

**12.**

| அ | ஆ |
|---|---|
| (i) மகாபாஷ்யம் | A - ஸ்ரீரங்கம் |
| (ii) ரிதம் | B - ஆதிசங்கரர் |
| (iii) ஆளவந்தார் | C - பயன் கோட்பாடு |
| (iv) மாண்டுக்யகாரிகை | D - வருணன் |
| (v) நாற்பாதங்கள் | E - கௌடபாதர் |

(1) BCADE (2) BDAEC (3) BDCAE (4) CBAED (5) CBDAE

**13.**

| அ | ஆ |
|---|---|
| (i) சரசோதிமாலை | A - சபாபதி சோதிடர் |
| (ii) சந்தானமணி | B - சோமசன்மா |
| (iii) சந்தானதீபிகை | C - போசராசபண்டிதர் |
| (iv) செகராசசேகரமாலை | D - இலகுசாதகம் |
| (v) அம்பலவாணபிள்ளை | E - அராலி இராமலிங்க முனிவர் |

(1) BCADE (2) BCAED (3) CADEB (4) CAEBD (5) CEABD

**14.**

| அ | ஆ |
|---|---|
| (i) மண்டலிதர் | A - இரண்டாம் நரசிம்மவர்மன் |
| (ii) ஈசானபண்டிதர் | B - முதலாம் நரசிம்மவர்மன் |
| (iii) வித்தியாவிநீதன் | C - இராஜராஜசோழன் |
| (iv) மாமல்லன் | D - கிருஸ்ணதேவராயர் |
| (v) இராஜசிம்மன் | E - பரமேசுவரவர்மன் |

(1) CDABE (2) CDEAB (3) DCABE (4) DCEAB (5) DCEBA

15.
| அ | ஆ |
|---|---|
| (i) இந்து சமயம் | A - மக்ஸ்மூலர் |
| (ii) உபநிடதங்கள் | B - பதஞ்சலி |
| (iii) யோகம் | C - சநாதன தர்மம் |
| (iv) அப்பர் | D - இந்து தத்துவம் |
| (v) சிந்துவெளி | E - தொண்டு நெறி |

(1) C B D E A (2) C D B A E (3) C D B E A (4) D C B A E (5) D C B E A

● **16** தொடக்கம் **30** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் அதன் கீழே தரப்பட்டுள்ளவற்றுள் மிகப்பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.

**16.** பிரபக்தித் தத்துவத்தை விளக்கும் நூல்
(1) கத்தியத்திரயம் (2) வேதாந்த சங்கிரகம் (3) பிரம்ம சூத்திரம்
(4) சூரியாசதகம் (5) இரத்தினத்திரயம்

**17.** வீரசைவக் கோட்பாட்டை விளக்கிக் கூறும் நூல்
(1) விஸ்ணு சித்தியம் (2) பிரபுலிங்கலீலை
(3) தட்சணாமூர்த்தி தோத்திரம் (4) நால்வர் நான்மணிமாலை
(5) சிவப்பிரகாசம்

**18.** குஷ்டரோகத்தை நிவர்த்தி செய்யும் 'இரஜனீ' என்னும் மருந்து பற்றிக் குறிப்பிடும் வேதம்
(1) இருக்குவேதம் (2) யசுர் வேதம் (3) சாமவேதம்
(4) அதர்வ வேதம் (5) அருத்த வேதம்

**19.** 'விண்பொரு நெடுவரை குறிஞ்சிக் கிழவ' என்று முருகனைக் குறிப்பிடும் நூல்
(1) பரிபாடல் (2) திருப்புகழ் (3) கந்தரலங்காரம்
(4) திருமுருகாற்றுப்படை (5) கந்தபுராணம்

**20.** கி. பி. முதலாம் நூற்றாண்டில் இலங்கை மக்கள் சிவ வழிபாட்டை மேற்கொள்பவர்களாக இருந்தனர் என்று குறிப்பிட்டவர்
(1) தொலமி (2) பாகியான் (3) இட்சிங்
(4) யுவாங்சுவாங் (5) மார்கோ போலோ

**21.** விக்கிரம சாளமேகேஸ்வரம் பற்றிக் குறிப்பிடும் கல்வெட்டு
(1) மெதிரிகிரிய கல்வெட்டு (2) பதவியா கல்வெட்டு (3) குருநாகல் கல்வெட்டு
(4) கோணேசர் கல்வெட்டு (5) கந்தளாய் கல்வெட்டு

**22.** சிவனின் பஞ்சகிருத்தியங்களை 'தோற்றம் துடியதனில் தோயுந்திதி அமைப்பில்...' எனும் பாடலால் வெளிப்படுத்தி நிற்கும் நூல்
(1) சிவப்பிரகாசம் (2) நெஞ்சுவிடுதூது (3) திருமந்திரம்
(4) உண்மை விளக்கம் (5) உண்மை நெறிவிளக்கம்

**23.** விசிட்டாத்வைதக் கோட்பாட்டின் தனிச்சிறப்பைக் காட்டும் பனுவலாக விளங்குவது
(1) திருப்பாவை (2) பெரியாழ்வார் திருமொழி (3) கண்ணினுள் சிறுதாம்பு
(4) திருவாய்மொழி (5) திருப்பல்லாண்டு

**24.** மனித உறவுகளுள் ஏதேனும் ஒன்றின் அடிப்படையில் பக்தன் தன்னை இறைவனோடு இணைத்துக் கொள்ளும் மனப்பாங்கு,
(1) பாவங்கள் எனப்படும். (2) பூரண சரணாகதி எனப்படும்.
(3) பக்தியோகம் எனப்படும். (4) முழுமையான ஒப்படைப்பு எனப்படும்.
(5) ராஜவித்யா எனப்படும்.

**25.** மண்டகப்பட்டுக் கல்வெட்டில் 'விசித்திரசித்தன்' என்று சுட்டப்படும் மன்னன்
(1) சிம்மவிஸ்ணு (2) பரமேஸ்வரவர்மன் (3) மகேந்திரவர்மன்
(4) முதலாம் நரசிம்மவர்மன் (5) நந்திவர்மன்

**26.** பண்டைய வானியல் பற்றிய கோட்பாடுகள் அடங்கிய தொகுதி
(1) சூரிய கோட்பாடு, புளிஷ கோட்பாடு, பிதாமஹ கோட்பாடு
(2) புளிஷ கோட்பாடு, பிதாமஹ கோட்பாடு, உறுப்பமைப்புக் கோட்பாடு
(3) மாசக்கிருத்தா கொள்கை, பிரமஸ்புட சித்தாந்தக் கோட்பாடு, புளிஷ கோட்பாடு
(4) பிதாமஹ கோட்பாடு, பிரமஸ்புட சித்தாந்தக் கோட்பாடு, கர்கஷேசக் கோட்பாடு
(5) சூரிய கோட்பாடு, புளிஷ கோட்பாடு, ஜ்யோதிசக் கொள்கை

**27.** துவைத வேதாந்தத்துடன் தொடர்புடைய தொகுதி
(1) சரீரசரீரிசம்பந்தம், சடபரஸ்பரபேதம், சர்வமூலம், இருமைவாதம், குணபூரணன்
(2) சர்வமூலம், ஸ்ரீபாஷ்யம், பரிணாமவாதம், அப்பிரதக்சித்தி, விஜாதிய பேதம்
(3) சரீரசரீரிசம்பந்தம், சர்வமூலம், இருமைவாதம், பேதவாதம், சீவசடபேதம்
(4) சர்வமூலம், இருமைவாதம், சீவபரஸ்பர பேதம், உடுப்பி, பாகவததாற்பரியநிர்ணயம்
(5) இருமைவாதம், சீவசடபேதம், பாகவததாற்பரியநிர்ணயம், ஸ்ரீபாஷியம், கேவலாத்வைதம்

**28.** கொடியேற்றத்துக்கு முன் நடைபெறும் கிரியைகளைக் கொண்ட தொகுதி
(1) மிருத்சங்கிரணம், அங்குரார்ப்பணம், கிராமசாந்தி, வாஸ்துசாந்தி, சமஸ்ததேவ ஆவாகனம்
(2) அங்குரார்ப்பணம், கிராமசாந்தி, வாஸ்துசாந்தி, கொடிமர பூசை, சுவாமி வலம்வருதல்
(3) கிராமசாந்தி, சமஸ்ததேவ ஆவாகனம், சகளீகரணம், எண்ணெய்காப்பு, கொடிமர பூசை
(4) அங்குரார்ப்பணம், கிராமசாந்தி, வாஸ்துசாந்தி, சமஸ்ததேவ ஆவாகனம், சுவாமி வலம்வருதல்
(5) கிராமசாந்தி, வாஸ்துசாந்தி, சமஸ்ததேவ ஆவாகனம், கொடிமர பூசை, மகேஸ்வர பூசை

**29.** ஆணவ மலத்தைக் குறித்து நிற்பது
(1) பசுத்துவம், அஞ்ஞானம், அசுத்தி, களங்கம், சடம்
(2) மோகம், ஆகந்துகம், சடம், விசுத்தி, மூலம்
(3) மலம், பசுத்துவம், அசுத்தி, மேவல், இச்சை
(4) அசுத்தம், சுத்தம், பிரகிருதி, ஆகந்துகம், இருள்மலம்
(5) சகசம், இருள்மலம், சுத்தாசுத்தம், கலை, களங்கம்

**30.** ஆகமங்களின் சரியாபாதத்தில் அடங்கும் தொகுதி
(1) பிராயச்சித்தவிதி, பவித்திரவிதி, ஆலய அமைப்புவிதி, சுற்றுப்பிரகார அமைப்பு, பரிபாலகர் அமைப்பு
(2) பிராயச்சித்தவிதி, சிவசின்னங்கள் அணியும் முறை, மந்திரம், உற்சவம், கோபுரம்
(3) ஆலய அமைப்பு விதி, பரிபாலகர் அமைப்பு, நித்திய உற்சவம், நைமித்ய உற்சவம், பவித்திரவிதி
(4) பிராயச்சித்தவிதி, உற்சவம், கோபுரம், மந்திரம், அலகிடுதல்
(5) ஆலய அமைப்பு விதி, உற்சவம், அலகிடுதல், மெழுக்கிடுதல், திருநந்தவனம் அமைத்தல்

● **31** தொடக்கம் **35** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் ஐந்து விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் உரிய தலைப்புடன் **பொருந்தாததைத்** தெரிவுசெய்க.

**31.** **சைவசித்தாந்த மாயை**
(1) சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை என மூவகைப்படும்.
(2) தனு கரண புவன போகங்களை வழங்கும் மூலப்பொருளாகும்.
(3) வார்த்தைகளால் விபரிக்க முடியாத அநிர்வசனியப் பொருளாகும்.
(4) முப்பத்தாறு தத்துவங்களுக்கு அடிப்படையானது.
(5) விடிவாமளவும் விளக்குப் போல ஆணவ இருளில் சிக்கிய ஆன்மாக்களுக்கு உதவும்.

**32.** ஞானயோகம்
(1) பகவத்கீதையில் 13 தொடக்கம் 18 வரையான அத்தியாயங்களில் விபரிக்கப்படுகிறது.
(2) அறிவு வழி என்று சுட்டப்படுகிறது.
(3) பிரகிருதி, புருஷன் ஆகிய இரண்டு தத்துவங்களைப் பற்றி அறிவதே ஞானம் என பகவத்கீதை குறிப்பிடுகின்றது.
(4) சிரவணம், மனனம், நிதித்தியாசனம் எனும் படிநிலைகளில் அமைந்திருக்கும்.
(5) ஆன்ம நிவேதனம் எனப்படுகிறது.

**33.** ஆறுமுகநாவலரின் சைவசமயப் பணிகள்
(1) சமயப் பிரசங்கம் செய்தமை
(2) புராணபடன மரபுக்குப் புத்துயிரூட்டியமை
(3) சமய நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டமை
(4) 'இந்துசாதனம்' என்ற பத்திரிகையை வெளியிட்டமை
(5) சைவப் பாடசாலைகளை நிறுவியமை

**34.** விநாயகரின் திருவுருவம்
(1) உலகம் முழுவதையும் வயிற்றில் உள்ளடக்கியவர்.
(2) 'ஓம்' என்ற பிரணவ மந்திரத்தைக் குறித்து நிற்பவர்.
(3) அன்பர்கள் கூறுவதைக் கேட்கும் பெரிய செவிகளை உடையவர்.
(4) இன்ப வடிவத்தைக் கொண்டவர்.
(5) பத்ர, மகர குண்டலங்களை அணிந்தவர்.

**35.** திருவாவடுதுறை ஆதீனம்
(1) நமசிவாய மூர்த்திகளால் நிறுவப்பட்டது.
(2) திருக்கைலாய பரம்பரை மெய்கண்ட சந்தானத்தை அடிப்படையாகக் கொண்டது.
(3) ஆறுமுகநாவலர், அருணாசலக் கவிராயர் முதலான சமயப் பெரியார்களைப் போற்றியது.
(4) சோழராட்சிக் காலத்தில் நிறுவப்பட்டது.
(5) 'மெய்கண்டான்' எனும் பத்திரிகையை வெளியிட்டு வருகின்றது.

- மேல்வரும் பகுதியில் A தொடக்கம் J வரையில் தரப்பட்டுள்ள சொற்களுள் இவ்விரண்டு சொற்கள் குறிப்பிட்டவொரு விடயத்தோடு தொடர்புடையவை. அவற்றின் பொருத்தப்பாட்டின் அடிப்படையில் **36** தொடக்கம் **40** வரையுள்ள ஒவ்வொரு வினாவுக்கும் பொருத்தமான சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

| | | | | |
|---|---|---|---|---|
| A<br>பேரிதாடனம் | B<br>தணிகைப் புராணம் | C<br>சுந்தரநாதன் | D<br>திருவெண்காடு | E<br>பஞ்சமரபு |
| F<br>திருப்பெண்ணாகடம் | G<br>திருநந்திதேவர் | H<br>பெருங்குருகு | I<br>பிரதிஷ்டை | J<br>அதிசயமாலை |

**36.** சிவாகமக் கிரியை மரபுடன் தொடர்புடைய சேர்மானம்
(1) AI (2) AH (3) CI (4) CJ (5) EH

**37.** சித்தர் திருமூலருடன் தொடர்புடைய சேர்மானம்
(1) CG (2) CJ (3) DF (4) DH (5) EG

**38.** இசைக்கலையுடன் தொடர்புடைய சேர்மானம்
(1) BJ (2) CH (3) DG (4) EF (5) EH

**39.** திருவாவடுதுறை ஆதீனத்துடன் தொடர்புடைய சேர்மானம்
(1) AJ (2) BJ (3) CF (4) DG (5) FH

**40.** மெய்கண்டதேவருடன் தொடர்புடைய சேர்மானம்
(1) AI (2) BI (3) CE (4) CH (5) DF

- **41** தொடக்கம் **50** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் ஐந்து விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் தலைப்புக்கு மிகப்பொருத்தமானதைத் தெரிவுசெய்க.

**41.** **சைவசித்தாந்த கன்மக் கொள்கையின் முக்கியத்துவம்**
(1) பிறவிகள் தோறும் தொடர்ந்து வருதல்
(2) புண்ணிய பாவங்களுக்குக் காரணமாதல்
(3) தனிமனித ஒழுங்கையும் சமூக ஒழுங்கையும் நெறிப்படுத்துதல்
(4) பிராரத்துவம், ஆகாமியம், சஞ்சிதம் என மூவகைப்படுதல்
(5) மனம், வாக்கு, காயம் எனும் மூன்று வழிகளில் ஆற்றப்படுதல்

**42.** **கண்ணகி வழிபாடு**
(1) கிராமியப் பெண் தெய்வ வழிபாட்டில் முதன்மையானது.
(2) இலங்கையில் கஜபாகு மன்னனால் செல்வாக்குப் பெற்றது.
(3) கண்ணகி வழிபாட்டில் கொம்புமுறித்தல் சடங்கு இடம்பெறுகிறது.
(4) கிழக்கிலங்கையில் கண்ணகி வழிபாடு சிறப்பிடம் பெறுகிறது.
(5) ஒழுக்கத்தை முதன்மைப்படுத்துவதே கண்ணகி வழிபாட்டின் அடிப்படையாகும்.

**43.** **சுவாமி விபுலாநந்தரின் சமயப் பணிகளில் பிரதானமானது**
(1) தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தில் ஈடுபட்டமை
(2) மதங்கசூளாமணி, யாழ்நூல் ஆகியவற்றை இயற்றியமை
(3) அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணியாற்றியமை
(4) மகாலட்சுமி தோத்திரம், கணேசதோத்திரபஞ்சகம், சுப்பிரமணிய சுவாமிகள் இரட்டைமணிமாலை ஆகியவற்றை இயற்றியமை
(5) பிரபோதசைதன்யர் எனும் பிரமச்சரிய நாமம் சூட்டப்பெற்றமை

**44.** **கிருஹஸ்தனுக்குரிய பிரதான கடமையாக தர்மசாஸ்திரம் குறிப்பிடுவது**
(1) சந்ததி விருத்திக்காகப் புதல்வர்களைப் பெறுதல்
(2) அறத்தின் வழி பொருளீட்டுதல்
(3) பஞ்சயக்ஞங்களை ஆற்றுதல்
(4) பிரம்மச்சரிய நிலைக்கு அடுத்த படிநிலையாக அமைதல்
(5) சகல ஜீவராசிகளையும் நேசித்தல்

**45.** **இந்துசமய வாழ்வில் சோதிடம்**
(1) வேதாங்கங்களில் ஒன்றாக விளங்குகின்றது.
(2) இதிகாச புராணங்களில் சோதிடத்தின் செல்வாக்கு காணப்படுகின்றது.
(3) வானசாஸ்திர அறிவும் கணிதப் புலமையும் சோதிடக் கணிப்புக்கு அவசியமானது.
(4) சமய கர்ம அனுட்டானங்களைச் செய்வதற்குரிய கணிப்பீடுகளை மேற்கொள்ள உதவும்.
(5) அறிவியலும் நம்பிக்கையும் இணைந்த கலையாகச் சோதிடம் திகழ்கிறது.

**46.** **அறுவகைத் தரிசனங்களில் யோகத்தின் தனிச்சிறப்பு**
(1) பதஞ்சலி முனிவரால் முறைப்படுத்தப்பட்டது.
(2) இருபத்துநான்கு தத்துவங்களை ஏற்றுக்கொள்கிறது.
(3) சாதனை நெறியாகத் திகழ்கிறது.
(4) மேலைத்தேசத்தவர்களால் பின்பற்றப்படுகிறது.
(5) திருமந்திரத்தில் குறிப்பிடப்படுகிறது.

**47. இராமாயணத்தின் சாரம்**

(1) குருபக்தியின் சிறப்பை எடுத்துரைப்பது.
(2) இல்லறத்தை முதன்மைப்படுத்துவது.
(3) இந்து தர்மநெறிக்கும் மானுட விழுமியங்களுக்கும் அடிப்படையானது.
(4) இந்துக் கல்விமுறையை எடுத்துக் கூறுவது.
(5) இந்துக்களின் வானியல் மற்றும் சோதிடம் பற்றிக் குறிப்பிடுவது.

**48. பொங்கல் பண்டிகையின் தாற்பரியம்**

(1) இந்துக்களால் கொண்டாடப்படும் பண்டிகைகளில் தைப்பொங்கல் முக்கியமானது.
(2) தை மாத முதல்நாளில் கொண்டாடப்படும் பண்டிகை இதுவாகும்.
(3) சூரியபகவானுக்கு நன்றி செலுத்தும் நாளாகும்.
(4) சூரியன் தனு ராசியிலிருந்து மகர ராசிக்குச் செல்லும் தினத்தில் கொண்டாடப்படுகிறது.
(5) மகரசங்கிராந்தி என்றும் அழைக்கப்படும்.

**49. இந்துதர்மம்**

(1) வேதங்கள், இதிகாசங்கள், தர்மசாஸ்திரங்கள் முதலிய வடமொழி நூல்கள் இந்து தர்மம் பற்றிக் கூறுகின்றன.
(2) திருமந்திரம், திருக்குறள், சிலப்பதிகாரம், ஆத்திசூடி முதலான பல தமிழ் நூல்கள் இந்து தர்மம் பற்றி விளக்குகின்றன.
(3) இந்துமதமானது அதன் தனிச்சிறப்பை எடுத்தியம்பும் வகையில் சநாதன தர்மம் என்று குறிப்பிடப்படுகின்றது.
(4) இந்துக்களிடையே சமயம், தத்துவம், கலை, சடங்குமுறை முதலானவற்றினூடாக அறமானது எடுத்துச் சொல்லப்படுகின்றது.
(5) இந்துதர்மமானது மனித வாழ்வைச் செம்மைப்படுத்தி ஆன்மிக மேம்பாடுபெற வழிசெய்கிறது.

**50. ஆகமமும் திருவுருவ வழிபாடும்**

(1) ஆகமங்கள் ஆலய வழிபாட்டினூடாகத் திருவுருவ வழிபாட்டைக் குறிப்பிடுகின்றன.
(2) திருவுருவங்களைச் செதுக்குவதற்குரிய கருங்கல்லைத் தெரிவுசெய்தலை 'சிலாபரீட்சணம்' என ஆகமங்கள் குறிப்பிடுகின்றன.
(3) திருவுருவங்களின் பிரதிமாலட்சணத்தில் ஆகமப் பிரமாணம் முதன்மையானது.
(4) திருவுருவங்களின் பங்கவமைதிகள், அங்க லட்சணம், அளவுப் பிரமாணம், ஆடை, ஆபரணம் ஆகியன பற்றி ஆகமங்கள் விவரிக்கின்றன.
(5) மக்களின் ஈடேற்றத்திற்காக திருவுருவ அமைப்பையும் அவை சார்ந்த கிரியை வழிபாட்டையும் ஆகமங்கள் குறிப்பிடுகின்றன.

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## අ.පො.ස. (උ.පෙළ) විභාගය/ க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சை - 2019

## නව නිර්දේශය/ புதிய பாடத்திட்டம்

විෂය අංකය / பாட இலக்கம்: **42**

විෂයය / பாடம்: **இந்து சமயம்**

## ලකුණු දීමේ පටිපාටිය/புள்ளி வழங்கும் திட்டம்

### I පත්‍රය/பத்திரம் I

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 01. | 2 | 11. | 1 | 21. | 3 | 31. | 3 | 41. | 3 |
| 02. | 5 | 12. | 2 | 22. | 4 | 32. | 5 | 42. | 5 |
| 03. | 4 | 13. | 4 | 23. | 2 | 33. | 4 | 43. | 4 |
| 04. | 5 | 14. | 5 | 24. | 1 | 34. | 5 | 44. | 3 |
| 05. | 1 | 15. | 3 | 25. | 3 | 35. | 4 | 45. | 4 |
| 06. | 4 | 16. | 1 | 26. | 1 | 36. | 1 | 46. | 3 |
| 07. | 2 | 17. | 2 | 27. | 4 | 37. | 1 | 47. | 3 |
| 08. | 5 | 18. | 4 | 28. | 1 | 38. | 5 | 48. | 3 |
| 09. | 5 | 19. | 4 | 29. | 1 | 39. | 2 | 49. | 5 |
| 10. | 5 | 20. | 1 | 30. | 1 | 40. | 5 | 50. | 4 |

✪ විශේෂ උපදෙස්/ விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට/ ஒரு சரியான விடைக்கு 02 ලකුණු බැගින්/புள்ளி வீதம்

මුළු ලකුණු/மொத்தப் புள்ளிகள் 2 × 50 = 100

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

හින්දු ධර්මය II
இந்து சமயம் II
Hinduism II

42 T II

06.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**அறிவுறுத்தல்கள் :**

※ பகுதி I இலிருந்து எவையேனும் **இரண்டு** வினாக்களையும், பகுதி II இலிருந்து எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

**1.** (அ) 'சநாதன தர்மம்' என்பதன் பொருள் யாது? (2 புள்ளிகள்)

(ஆ) இந்து சமயத்தை அறிந்துகொள்வதற்கான வரலாற்று மூலாதாரங்கள் யாவை? (4 புள்ளிகள்)

(இ) உலக சகோதரத்துவத்தை வளர்ப்பதற்கு இந்துசமயம் கூறும் அறிவுரைகள் பற்றிச் சுருக்கமாக விவரிக்குக. (6 புள்ளிகள்)

(ஈ) சமூக ஒருமைப்பாட்டை ஏற்படுத்துவதில் திருக்கோயில்களின் பங்களிப்பை விளக்குக. (8 புள்ளிகள்)

**2.** (அ) இருக்கு வேதத்தின் அமைப்பினை எடுத்துக்காட்டுக. (4 புள்ளிகள்)

(ஆ) இருக்கு வேத 'ரிதக் கொள்கை' பற்றிக் குறிப்பிடுக. (4 புள்ளிகள்)

(இ) இருக்கு வேதம் கூறும் இயற்கை வழிபாடு பற்றிச் சுருக்கமாக விளக்குக. (6 புள்ளிகள்)

(ஈ) இருக்கு வேதத்தில் இடம்பெறும் தத்துவ சிந்தனைகளைச் சுருக்கமாக விளக்குக. (6 புள்ளிகள்)

**3.** (அ) சைவ வழிபாட்டில் நடராஜ திருவுருவம் பெறுகின்ற முக்கியத்துவத்தை எடுத்துக்காட்டுக. (4 புள்ளிகள்)

(ஆ) நடராஜ வடிவத்தின் பிரதிமாலட்சணங்களைக் குறிப்பிடுக. (4 புள்ளிகள்)

(இ) தத்துவ நோக்கில் நடராஜ திருவுருவ அமைப்பை விவரிக்குக. (6 புள்ளிகள்)

(ஈ) நடராஜ திருவுருவத்தின் கலைத்துவச் சிறப்பினை விளக்குக. (6 புள்ளிகள்)

## பகுதி II

4. மத்துவரின் துவைத வேதாந்தச் சிந்தனைகளை மேல்வரும் விடயங்களினூடாகத் தெளிவுபடுத்துக.

(அ) துவைதம் என்பதன் பொருள் விளக்கமும் பிரமாணங்களும்

(ஆ) ஈஸ்வரன்

(இ) சீவன்

(ஈ) விடுதலை (5 × 4 = 20 புள்ளிகள்)

5. சைவசித்தாந்தம் கூறும் விடுதலை பற்றிய நோக்கில் மேல்வரும் விடயங்கள் பெறும் இடத்தினை விபரிக்குக.

(அ) தீட்சை

(ஆ) பஞ்சாட்சர மந்திரம்

(இ) நாற்பாதம்

(ஈ) முத்திநிலை (5 × 4 = 20 புள்ளிகள்)

6. இந்துசமய மரபில் சிவாகமங்கள் பெறும் முக்கியத்துவத்தினை மேல்வரும் தலைப்புகளினூடாக விளக்குக.

(அ) சிவாகமங்களின் சிறப்பு

(ஆ) ஆலய அமைப்பு முறை

(இ) நித்தியக் கிரியைகள்

(ஈ) மகோற்சவம் (5 × 4 = 20 புள்ளிகள்)

7. இலங்கையின் இந்துசமய வரலாற்றில் மேல்வரும் சிவாலயங்கள் பெறும் முக்கியத்துவத்தை மதிப்பிடுக.

(அ) திருக்கேதீஸ்வரம்

(ஆ) கொக்கட்டிச்சோலை தான்தோன்றீஸ்வரம் (10 × 2 = 20 புள்ளிகள்)

8. 'பகவத்கீதை ஒரு வாழ்வியல் நூலாகும்.' மேல்வரும் விடயங்களை அடிப்படையாகக் கொண்டு பகவத்கீதை பற்றி விளக்குக.

(அ) பக்தி மார்க்கம்

(ஆ) தன்னலமற்ற சேவை மார்க்கம் (10 × 2 = 20 புள்ளிகள்)

* * *

01.

அ) சநாதன தர்மம் என்பதன் பொருள் யாது? (2 புள்ளிகள்)

ஆ) இந்துசமயத்தை அறிந்து கொள்வதற்கான வரலாற்று மூலாதாரங்கள் யாவை? (4 புள்ளிகள்)

இ) உலக சகோதரத்துவத்தை வளர்ப்பதற்கு இந்துசமயம் கூறும் அறிவுரைகள் பற்றி சுருக்கமாக விபரிக்குக. (6 புள்ளிகள்)

ஈ) சமூக ஒருமைப்பாட்டை ஏற்படுத்துவதில் திருக்கோயில்களின் பங்களிப்பினை விளக்குக. (8 புள்ளிகள்)

**அ. சநாதன தர்மம்....**

- சனாதன தர்மம் என்பது என்றும் உள்ள தர்மம்,
- நேற்று இன்று நாளை என்ற முக்காலத்துக்கும் உரியதான அடிப்படைத் தர்மம், "முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம் பொருளே...."
- பிரபஞ்சத்தைத் தாங்கி நிற்கும் சக்தி இருப்புத் தத்துவம் உள்ளார்ந்த தன்மை சநாதன தர்மம் ஆகும்.
- ச + அநா + தன = இன்றைக்குரியதல்ல என்றுமுள்ளது.

(02 புள்ளிகள்)

**ஆ. இந்து சமயத்தை அறிந்து....**

- இலக்கியங்கள் – வேதங்கள், இதிகாச புராணங்கள், ஆகமங்கள், பக்தி இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள், நாடகங்கள், பழங்கதைகள்.
- பிறநாட்டு அறிஞர் குறிப்புகள் – மெகஸ்தனிஸ் – இன்டிகா, பிளினி, தொலமி, பாகியான், யுவான் சுவாங், இட்சிங் போன்றோரின் குறிப்புகள்.
- தொல்பொருட்சின்னங்கள் – சிந்துவெளித் தொல்பொருட்சாதனங்கள், மௌரிய, குப்தர் காலச் சின்னங்கள் இன்ன பிற
- கல்வெட்டுக்கள்
- செப்பேடுகள்
- பட்டயங்கள்
- நாணயங்கள்
- நினைவுச்சின்னங்கள் போன்றன...... (04 புள்ளிகள்)

**இ. உலக சகோதரத்துவத்தை வளர்ப்பதற்கு....**

- இந்து சமயம் உலக சகோதரத்துவத்தை வளர்க்கும் உன்னத நோக்கை அடிப்படையாகக் கொண்டது.
  உதாரணம் – "சர்வே ஜனகா சுகினோ பவந்து" (எல்லா மக்களும் சுகம் பெறுவதாக)
  "இன்பமே சூழ்க எல்லோரும் வாழ்க"
  "வான்முகில் வளாது பெய்க.."
- வேற்றுமையில் ஒற்றுமை காண்பது
- எல்லோரையும் கடவுளின் குழந்தைகளாகக் கொண்டு சகோதர பாசத்தோடு நாம் பிறருக்காக வாழ வேண்டும் என்று எடுத்துரைப்பது.
- ஊருக்கு உழைத்திடல் யோகம் என்பதே இந்து வாழ்வியல்

- சகோதர மனப்பான்மையை வளர்ப்பதனாலேயே மனிதன் இம்மையிலும், மறுமையிலும் உயர்வடையலாம் என்பதே இந்து தத்துவம். **(06 புள்ளிகள்)**

**ஈ. சமூக ஒருமைப்பாட்டை....**

- தனிமனித வாழ்வு சமூகத்திலும் இயற்கையிலும் தங்கியுள்ளது.
- அருள்நிதியங்களாக விளங்குபவை ஆலயங்கள்.
- ஆலயங்களில் இடம்பெறும் நித்திய, நைமித்திய உற்சவங்கள் இறையருளைப் பிரவாகிக்கும் தன்மை கொண்டவை.
- தனிமனித வாழ்வு சிறக்கவும் சமூகம் மேம்பாடடையவும் இறையருள் வளம் அவசியமானது.
- ஆலய வழிபாட்டினால் தனிமனித உன்னதம் சமூக உன்னதம் என்பன ஏற்படுகின்றன.
- தனிமனிதனை சமூக மனிதனாக மாற்றும் அருள்வளங் கொண்டவை.
  "கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்"
  "ஆலயம் தொழுவது சாலவும் நன்று"
  "ஆலயம் இல்லா ஊர் அடவி காடே" முதலான அருள் வாக்குகள்.
- ஊர்கூடித் தேர் இழுத்தல் – சமூக ஒருமைப்பாட்டை ஏற்படுத்துவது.
- அன்னதானம் – ஒன்றுகூடி, பகிர்ந்து பங்கிட்டு உண்ணல்.
- கோயில் தொண்டு – சமூகத்தை ஒன்றுபடுத்துகிறது.
- கோயிற்பழக்கம் என்ற பதம் ஆலயத்தில் குரு, பெரியோர், அடியவர், சுற்றத்தார், ஆதரவற்றோர், இயற்கை முதலியவற்றை மதிக்கும் பண்பாட்டை உணர்த்துவது..

**(08 புள்ளிகள்)**

**02.**

**அ) இருக்கு வேதத்தின் அமைப்பினை எடுத்துக்காட்டுக. (4 புள்ளிகள்)**

**ஆ) இருக்கு வேத ரிதக் கொள்கை பற்றிக் குறிப்பிடுக (4 புள்ளிகள்)**

**இ) இருக்கு வேதம் கூறும் இயற்கைவழிபாடு பற்றிச் சுருக்கமாக விளக்குக. (6 புள்ளிகள்)**

**ஈ) இருக்கு வேதத்தில் இடம்பெறும் தத்துவ சிந்தனைகளை சுருக்கமாக விளக்குக. (6 புள்ளிகள்)**

**அ. இருக்கு வேதத்தின்...**

- இருக்கு என்பது பாடல் / பாட்டு என்று பொருள்படும்.
- 10மண்டலங்கள் 1028 சூக்தங்கள் 10552மந்திரங்கள்.
- இவற்றுள் 2-7 மண்டலங்கள் பழமையானவை- கோத்திரமண்டலம்
- 1ஆம் 10ஆம் மண்டலங்கள் தத்துவார்த்தரீதியில் முக்கியத்துவம் உடையவை.
- நாசதீயசூக்தம், புருசசூக்தம், யமசூக்தம், ஔசதிசூக்தம் போன்றவற்றின் முக்கியத்துவம்.

**(04 புள்ளிகள்)**

**ஆ. இருக்குவேத ரிதக் கொள்கை..........**

- ரிதம் என்றால் நியதி, விரதம், ஒழுங்குமுறை எனப்பொருள்படும்.
- இயற்கையொழுங்கு பிரபஞ்ச இயற்கையின் ஒழுங்கு தனிமனித ஒழுக்கவியல் ஆகியன ரிதத்தின்பாற்படுவன.
- வருணனே ரிதத்தின் காவலனாக, அதனைக் கண்காணித்து கட்டுப்படுத்துபவனாக அச்சத்துடன் வணங்கப்படுகிறான்.
- ரிதஸ்யகோபா என்ற பெயர் வருணனைச் சுட்டுகிறது.
- ரிதத்தை மீறுபவர்கள் வருணபாசத்தால் தண்டிக்கப்படுவர்.
- இந்துசமயத்தின் பிற்கால அறக்கோட்பாட்டின் வளர்ச்சிக்கு வித்திட்டது.

**(04 புள்ளிகள்)**

**இ. இருக்கு வேதம் கூறும் இயற்கைவழிபாடு....**

- இயற்கை நிகழ்ச்சிகளையும் சூரியன் முதலிய இயற்கைச்சக்திகளையும் நேரடியாகத் தெய்வங்களாக உருவகித்து வழிபடல்.
- 33 இயற்கைத் தெய்வங்கள் - யாஸ்கரைப் பின்பற்றி 3 வகைப்படுத்தி நோக்குவர்.
  மண்ணுக்குரியவை.
  விண்ணுக்குரியவை
  இடைவெளிக்குரியவை.
  (பொருத்தமான எடுத்துக்காட்டுக்கள்)
- சில முக்கியதெய்வங்களின் தோற்றப்பொலிவு சிறப்பியல்புகள்.
  இந்திரன் - போர்க்கடவுள் - விருத்திரனை வென்றவர்
  அக்கினி - புரோகிதன், தூதுவன்
  உருத்திரன் - புயற்கடவுள்
  வருணன் - ஒழுக்கத்தைக் கண்காணிப்பவன்
- ரிக்வேதத்தில் எரியோம்பி வழிபடும் முறை காணப்படுகிறது.
- பிற்கால யாக வழிபாட்டு முறைக்கு முன்னோடியாக அமைந்துள்ளது.
- பண்டமாற்று வணக்கமுறை - "நான் உனக்கு நெய் தேன்...."
- அன்றாட வழிபாட்டில் நித்தியாக்கினி ஹோத்திரம் இடம்பெற்றது.

**(06 புள்ளிகள்)**

**ஈ. இருக்கு வேதத்தில்.....**

- இயற்கை நிகழ்ச்சிகளுக்கான காரிய காரணத் தொடர்புகள் பற்றிச் சிந்திக்கும் முறைமை உருவானமை.
- இருக்குவேத பரம்பொருள் சிந்தனை வளர்ச்சி நிலை
  அனைத்திறமைக் கோட்பாடு
  பலதெய்வக்கோட்பாடு
  சந்தர்ப்பவாதக் கடவுட்கோட்பாடு
  ஒருகடவுட்கொள்கை
  ஒருமைக்கொள்கை சுருக்கமாக விளக்கப்படல் வேண்டும்.
- "ஏகம்ஷத் விப்ரா பகுதா வதந்தி" (உள்பொருள் ஒன்றே....) **(06 புள்ளிகள்)**

- "ஹஸ்மை தேவாய ஹவிஸ் விதேகம்" – நாம் எந்தத் தெய்வத்திற்கு அவி சொரிவோம் என்ற கேள்வி – ஐயவுணர்வு
- பிரபஞ்ச உற்பத்தி – நாசதீய சூக்தம் – தொடக்கத்தில் எதுவுமே இல்லை.

**(06 புள்ளிகள்)**

**03. அ) சைவவழிபாட்டில் நடராஜ திருவுருவம் பெறுகின்ற முக்கியத்துவத்தை எடுத்துக்காட்டுக (4 புள்ளிகள்)**

**ஆ) நடராஜ வடிவத்தின் பிரதிமாலட்சணங்களைக் குறிப்பிடுக. (4 புள்ளிகள்)**

**இ) தத்துவ நோக்கில் நடராஜ திருவுருவ அமைப்பினை விபரிக்குக. (6 புள்ளிகள்)**

**ஈ) நடராஜ திருவுருவத்தின் கலைத்துவச் சிறப்பினை விளக்குக. (6 புள்ளிகள்)**

**அ. சைவவழிபாட்டில் நடராஜ திருவுருவம்...**

- சிவமூர்த்தங்கள் அறுபத்து நான்கு.
- 25 மூர்த்தங்கள் சிறப்பானவை. அவற்றுள் முதன்மை பெறுவது. நடராஜ வடிவம்.
- கோயில் எனச்சிறப்பிக்கப்படுகின்ற சிதம்பரத்தில் எழுந்தருளி அருள்பாலிக்கும் சிறப்பு.
- சமயம், தத்துவம், கலை, அறிவியல் மரபுகளூடாக சைவவழிபாட்டு மரபில் சிறந்து விளங்குதல்.
- தோத்திர மரபில் சிறப்பிக்கப்படுகின்றமை.
  "குனித்த புருவம்......"
  "உலகெலாம் உணர்ந்து......அம்பலத்தாடுவான்....."
- ஆருத்திரா தரிசனம், திருவெம்பாவை முதலான விரத அனுட்டானங்கள்..
- சைவாலயங்களில் நிருத்த மண்டபங்களின் அமைப்பு
- திருக்கேயில்களில் நடராஜ படிமத்தின் பிரதிஷ்டைகள். **(04 புள்ளிகள்)**

**ஆ. நடராஜ வடிவத்தின் பிரதிமாலட்சணங்கள்**

- நடராஜ வடிவத்தின் இலட்சணங்கள் முக்கண், சடாமுடியில் பாம்பு, கொக்கிறகு, ஊமத்தம்பூ.... பத்திர குண்டலம், மகர குண்டலம், புலித்தோல், முயலகன், பவளநிறம், குஞ்சிதபாதம், வலது முன்கரம் அபயகரம், வலது பின்கரம் டமருகம், இடது முன்கரம் வீசுகரம், இடது பின்கரம் அக்கினி, திருவாசி
  "குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயும்...."
  "தோலும் துகிலும் குழையும்...." **(04 புள்ளிகள்)**

**இ. தத்துவ நோக்கில் நடராஜ திருவுருவம்...**

- பஞ்சகிருத்தியங்களை உணர்த்துதல்.....

| | | |
|---|---|---|
| படைத்தல் | – | டமருகம் ஏந்திய கரம் |
| காத்தல் | – | அபயகரம். |
| அழித்தல் | – | அக்கினி ஏந்திய கரம். |
| அருளல் | – | தூக்கிய திருவடி |
| மறைத்தல் | – | முயலகன் மீது ஊன்றிய திருவடி. |

- "தோற்றம் துடியதனில் தோயுந் திதியமைப்பில்"
- "அரன்துடி தோற்றம்.."
- தூல, சூக்கும பஞ்சாட்சர மந்திரங்களின் குறியீட்டு விளக்கமாக அமைதல்
  - ந - திருவடி
  - ம - திருவயிறு
  - சி - திருத்தோள்
  - வா - திருமுகம்
  - ய - திருமுடி
- தோற்றப் பொலிவு உணர்த்தும் தத்துவங்கள்
  "தத்துவமாடச் சதாசிவம்....."

**(06 புள்ளிகள்)**

**ஈ. நடராஜ திருவுருவத்தின் கலைத்துவச்...**

- நிருத்தக் கலையின் நாயகனாகத் திகழ்தல்.
- 108 தாண்டவங்கள்
- இந்துவிக்கிரகக் கலையின் வளர்ச்சி மற்றும் சோழர்கால வெண்கலப் படிமக்கலையின் வளர்ச்சி
- பிரபஞ்ச நர்த்தனம் – சிதம்பரத்தில் தில்லைக் கூத்தன்
- ஆனந்தக் குமாரசுவாமியின் Dance of Siva என்ற நூலில் மிகச்சிறந்த கலைப் பெறுமதி உடைய வடிவமாக நடராஜ வடிவம் சிறப்பிக்கப்படுகிறது.

**(06 புள்ளிகள்)**

**04. மத்துவரின் துவைத வேதாந்தச் சிந்தனைகளை மேல்வரும் விடயங்களினூடாகத் தெளிவுபடுத்துக.**

**அ) துவைதம் என்பதன் பொருள் விளக்கமும் பிரமாணங்களும்**

**ஆ) ஈஸ்வரன்**

**இ) சீவன்**

**ஈ) விடுதலை** **(5 x 4 = 20 புள்ளிகள்)**

**அ. துவைதம் என்பதன் பொருள்**

- துவைதம் (துவி) எனும் சொல்லுக்கு இரண்டு/இருமை வேறுபாடு எனப் பொருள் கொள்வர்.
- இரண்டு எனப்பேசப்படும் ஈஸ்வரனும் சீவனும் எந்தச்சந்தர்ப்பத்திலும் வேறுபட்டவையாகவே திகழ்கின்றன.
- அவை இரண்டும் ஒருபோதும் ஒன்றாவதில்லை.
- இரண்டும் இரண்டாக இருப்பதே துவைதம்.
- சங்கரர் ஒருமை வாதம் பேச மத்துவர் துவைத வாதத்தின் மூலம் அதனை மறுத்துரைக்கின்றார்.

**பிரமாணங்கள்**

- புலக்காட்சி, அனுமானம், ஆப்தம் ஆகிய மூவகைப் பிரமாணங்களைக் கொண்டு துவைத வேதாந்தத்தை நிறுவுதல்.

**(05 புள்ளிகள்)**

**ஆ. ஈஸ்வரன்**

- ஈஸ்வரனே சுதந்திரமான உள்பொருள்.
- மற்றைய உள்பொருள்களான ஆன்மாக்களும் சடமும் சுதந்திரமற்றவை, ஈஸ்வரனுக்கு கட்டுப்பட்டவை.
- சர்வோக்தமன்,(சார்பற்றவன்) குணபூரணன்
- மாயையை தனக்குரிய ஆற்றலாகக் கொண்டவன்.
- மத்துவர் கூறும் ஈஸ்வரன் மகாவிக்ஷ்ணுவே ஆவார்.
- உயிர்களின் நலன் பொருட்டு முத்தொழில்களையும் இயற்றுகின்றார்.
- ஈஸ்வரனுக்கு இரு நிலைகள் – சகுணம், நிர்க்குணம்
- சகுணப்பிரமத்துக்கு முதன்மையளித்தல்

**(05 புள்ளிகள்)**

**இ. சீவன்**

- நித்தியப் பொருள்
- எண்ணற்றவை,
- மூவகை சீவன்கள்
  நித்திய முத்தர்கள் – நித்திய சுதந்திரமாய் இருப்பவை (இலட்சுமி)
  முத்தர்கள் – சம்சாரத்தளையில் நின்று விடுபட்டவை (தேவர்கள், ரிக்ஷிகள்)
  பெத்தர்கள் – சம்சாரத்தளையில் பிணிக்கப்பட்டவை (மனிதன்)
- வீடுபேறடையத் தகுதியுடையோர், வீடுபேறடையத்தகுதி அற்றோர் என பெத்தான்மாக்களை இருவகைப்படுத்தல்.
- வீடுபேறடையத் தகுதியற்ற சீவன்களை சம்சாரபந்தத்தில் உழல்வோர், நித்திய நரகத்தில் உழல்வோர் என இருவகைப்படுத்துவர்.
- ஈஸ்வரனைச் சார்ந்திருப்பவை
- வினைப்பயனுக்கு ஏற்ப பிறவி எடுப்பவை **(05 புள்ளிகள்)**

**ஈ. விடுதலை**

- விடுதலை என்பது மகாவிக்ஷ்ணு உறையும் ஸ்ரீவைகுண்டத்தை அடைதல்.
- இறையருளின்றி ஆன்மா தன் முயற்சியால் நேரே விடுதலை அடைய முடியாது.
- வாயுபகவானின் துணையுடனேயே ஆன்ம விடுதலை கைகூடும்.
- ஞானம், பக்தி என்பன விடுதலைக்கான வழிகளாகும்.
- முத்திநிலையிலும் ஆன்மா ஈஸ்வரனிலிருந்து வேறுபட்டே நிற்கும். இரண்டறக் கலப்பதில்லை.

**(05 புள்ளிகள்)**

**05. சைவசித்தாந்தம் கூறும் விடுதலை பற்றிய நோக்கில் மேல்வரும் விடயங்கள் பெறும் இடத்தினை விபரிக்குக.**

**அ) தீட்சை**

**ஆ) பஞ்சாட்சர மந்திரம்**

**இ) நாற்பாதம்**

**ஈ) முத்திநிலை** **(5 x 4 = 20 புள்ளிகள்)**

**அ. தீட்சை**

- சமயதீட்சையே ஒருவனை சைவனாக்குவது.
- சைவசமயத்தில் பிரவேசிக்கும் தன்மையால் பிரவேசதீட்சை எனவும் வழங்கப்படும்.
- தீட்சை பெறாதவர் சைவம் கூறும் ஆன்மார்த்த பரார்த்த காரியங்களை ஆற்றமுடியாது.
- பாசத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுப்பது.
- சமயதீட்சை, விசேடதீட்சை, நிர்வாணதீட்சை என மூன்றுவகைப்படும்.
- மேலும் தீட்சைகள்
  சாதார தீட்சை – (எழுவகைப்படும்)
  நிராதார தீட்சை எனவும் வகைப்படுத்தி நோக்குவர்.
- இவ்வகைத்தீட்சைகள் பெற்று ஆச்சாரிய அபிடேகம் பெற்ற ஒருவருக்கே தீட்சையளிக்கும் தகுதியுண்டு.
- தீட்சை பெற்றவரே உருத்தராக்கம் அணியும் அருகதையுடையவர்.
- தீட்சைபெற்றவர் விபூதி உருத்திராக்கம் ஆகிய சிவசின்னங்கள் அணிந்து முறையாக ஒழுகிவரின் இறையருளால் சற்குரு வாய்க்கப்பெற்று இறுதி நிலையாகிய வீடுபேற்றினைப் பெறுகின்றார்.

**(05 புள்ளிகள்)**

**ஆ. பஞ்சாட்சர மந்திரம்**

- பஞ்ச + அக்கரம் = பஞ்சாக்கரம், பஞ்சாட்சரம் எனவும் வழங்கப்படும்.
- நமசிவாய (தூலபஞ்சாக்கரம்) சிவாயநம (சூக்கும பஞ்சாக்கரம்) என இருவகைப்படும்.
- திருவருட்சக்தி வடிவங்களாக விளங்குபவை
- "அஞ்செழுத்து ஆகமமும் அண்ணல் அருமறையும்"
- "நாதன் நாமம் நமசிவாயவே"
- "வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமசிவாயவே"
- "நமசிவாய வாழ்க"
- "நற்றுணையாவது நமசிவாயவே"
- "சொல்லும் நா நமசிவாயவே"

**(05 புள்ளிகள்)**

**இ. நாற்பாதம்**

- சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன சைவ நாற்பாதங்களாகும்.
- இவை அரும்பு, மலர், காய், கனி என உவமிக்கப்படும்.
- "விரும்பும் சரியை முதல் மெய் ஞானம்" – தாயுமானவர்
- சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் எனும் நால்வகை முத்திகள்.
- நாயன்மார்கள் நின்றொழுகிய நெறி
  அப்பர் – சரியை, சம்பந்தர் – கிரியை,
  சுந்தரர்– யோகம், மாணிக்கவாசகர் – ஞானம்
- சைவசித்தாந்தம் கூறும் ஆன்ம விடுதலைக்கான வழிகள்..
  (தோத்திர சாத்திர நூல்களை ஆதாரமாகக் கொண்டு விளக்கப்பட வேண்டும்)

**(05 புள்ளிகள்)**

**ஈ. முத்திநிலை**

- நான்கு மார்க்கங்கள் மூலம் நான்கு வகை முத்திநிலைகளை அடைதல் – சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம்.
- சச்சிதானந்தனைக் கூடி நித்தியானந்தத்தை அனுபவித்தல்.
- இதனையே சிவாத்துவிதம் அல்லது சுத்தாத்துவித முத்தி என்பர்..
  தாள் + தலை = தாடலை
  "தாடலை போல் கூடியவை தானிகளா" (திருவருட்பயன்)
- ஆன்மா மலங்களில் இருந்தும் நீங்கி சிவமாதல்.
- முத்திபடிநிலைகள்
- இருவினை ஒப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம்.
- ஜீவன்முத்தி, விதேகமுத்தி என இருவகைப்படல
  (தோத்திர, சாத்திர நூற்கருத்துக்களை ஆதாரங்காட்டி விளக்கப்பட வேண்டும்.)

**(05 புள்ளிகள்)**

**06. இந்துசமய மரபில் சிவாகமங்கள் பெறும் முக்கியத்துவத்தினை மேல்வரும் தலைப்புகளினூடாக விளக்குக.**

**அ) சிவாகமங்களின் சிறப்பு.**

**ஆ) ஆலய அமைப்புமுறை**

**இ) நித்தியக்கிரியைகள்**

**ஈ) மகோற்சவம்** **(5 x 4 = 20 புள்ளிகள்)**

**அ. சிவாகமங்களின் சிறப்பு**

- வேதமோடாகமம் மெய்யாம் இறைவன் நூல் – திருமந்திரம்
- சைவத்தின் பொது நூல் வேதங்கள், சிறப்பு நூல் ஆகமங்கள்
- சிவாகமங்கள் சிவனால் அருளப்பட்டவை.
- சுவதந்திரம், விதிநூல்கள், பரசுருதி, சிரௌதம் எனும் பெயர்களால் சுட்டப்படும் சிறப்பு
- ஆலயவழிபாட்டையும் அவை சார்ந்த அனுட்டானங்களையும் விதிகளாக விளக்குவதனால் சாத்திரங்கள் என்றும் கூறப்படுகின்றன.
- கட்புலனுக்குத் தெரியாத இறைவனை கட்புலனால் அனுபவிக்கும் வகையில் உருவவழிபாட்டைக் கூறுகின்றமை.
  "ஆகமமாகிநின்று அண்ணிப்பான்"
  "அண்ணல் அருளால் அருளும் சிவாகமம்" மாணிக்கவாசகர்

**(05 புள்ளிகள்)**

**ஆ. ஆலய அமைப்புமுறை**

- சைவ மக்களின் வாழ்வை வளம்படுத்தும் நோக்கில் ஆகமங்கள் ஆலய வழிபாட்டை எடுத்துக் கூறுவன.
- ஆலயம் அமைக்கும் இடம், அமைப்பு, ஆலயத்தின் உறுப்புகள், அவை அமைய வேண்டிய இடங்கள், அவற்றின் அளவைப் பிரமாணங்கள், கோயிற் கிரியைகள், ஆலய அனுட்டானங்கள் போன்ற விடயங்களை விதிகளாகக் கூறுவன.
- திருவுருவ வழிபாட்டை மையமாகக் கொண்டு ஆலய வழிபாட்டைக் கூறுவன.
- திருவுருவங்களைச் செதுக்குவதற்குரிய கருங்கல்லைத் தெரிவுசெய்தலை 'சிலாபரீட்சணம்' என்ற தலைப்பில் ஆகமங்கள் எடுத்துக்கூறுகின்றன.
- திருவுருவங்களின் பிரதிமாலட்சணத்தில் ஆகமப்பிரமாணம் முதன்மையான இடம் பெறுகின்றது.
- மனித உடலமைப்பை ஒத்ததாகவே ஆலயங்கள் அமைக்கப்படவேண்டும் என்பதே ஆகம விதியாகும்.
- கர்க்ஷணம், பிரதிஷ்டை ஆகிய விடயங்களூடாக ஆலய அமைப்பையும் விதிகளையும் எடுத்துக்கூறுவன.

**(05 புள்ளிகள்)**

**இ) நித்தியக்கிரியைகள்**

- கோயிற்கிரியைகள் மூவகைப்படும்
  நித்திய கிரியை – நாள்தோறும் இடம்பெறுவது
  நைமித்தியம் – விசேட நாட்களில் இடம்பெறுவது
  காமியம் – பயன் அவாவிச்செய்யப்படுவது
- ஆலயத்தின் பொருளாதார வசதிக்கேற்ப ஒருவேளை பன்னிருவேளை பூசைகள் இடம்பெறுதல்
- அபிடேகம், அலங்காரம், நைவேத்தியம், தீபாராதனை, தோத்திரம், வாழ்த்து என்பன நித்தியக் கிரியையின் அங்கங்களாகும்.
- நித்திய கிரியையில் ஏற்படும் குறைகளைப் போக்கவும் மூலமூர்த்தியின் திருவருட்சக்தியை அதிகரிக்கச் செய்யவும் நைமித்தியக் கிரியைகள் ஆற்றப்படும்.

**(05 புள்ளிகள்)**

**ஈ) மகோற்சவம்**

- மகோற்சவம் – மகா + உற்சவம்
- பிரமோற்சவம், பெருந்திருவிழா எனவும் அழைக்கப்படும்.
- நைமித்தியக் கிரியைகளில் முக்கியத்துவம் வாய்ந்தது.
- மகோற்சவ கிரியைகள் சித்தாந்த தத்துவத்தை வெளிப்படுத்தும் தன்மையன.
- படைத்தல் – கொடியேற்றமும் கொடியேற்றத்துக்கு முன் இடம்பெறும் மிருத்சங்கிரணம், அங்குரார்ப்பணம், கிராமசாந்தி, வாஸ்துசாந்தி, பேரிதாடனம், சமஸ்ததேவதா ஆவாகனம்,
  காத்தல் – வாகனத்திருவிழா
  அழித்தல் – தேர்த்திருவிழா
  அருளல் – தீர்த்தத் திருவிழா
  மறைத்தல் – மௌனஉற்சவம்
- மகோற்சவகாலத்தில் சுவாமி வீதிவலம் வருதல் சாம்பவ தீட்சை எனப்படும்.
- ஊர்கூடித் தேரிழுத்தல் – சமூகமேம்பாடு
- அகப்புறத்தூய்மை, சமூக சேவை மனப்பான்மை வளர்தல், தனிமனித – சமூக மேம்பாடு

**(05 புள்ளிகள்)**

**07. இலங்கையின் இந்துசமய வரலாற்றில் மேல்வரும் சிவாலயங்கள் பெறும் முக்கியத்துவத்தினை மதிப்பிடுக.**

**அ) திருக்கேதீஸ்வரம்**

**ஆ) கொக்கட்டிச்சோலை தான்தோன்றீஸ்வரம்** **($10 \times 2 = 20$ புள்ளிகள்)**

**அ) திருக்கேதீஸ்வரம்**

- பஞ்ச ஈஸ்வரங்களில் ஒன்று.
- ஆலய அமைவிடம். மன்னார் – மாதோட்டம்
  மாதுவட்ட / மாதோட்டம்
  கேது வழிபட்டமையால் கேதீஸ்வரம்
- வரலாற்றுச்சிறப்பு
- இதிகாசபுராண கால ஐதிகங்கள், மகாவம்சம், தாடவம்சம், தட்சணகைலாசமான்மியம், கேதீஸ்வர மான்மியம் முதலான நூலாதாரங்கள்

- பாடல் பெற்ற தலம்: சம்பந்தர், சுந்தரர்
- பல்லவர் சோழர் காலத்தில் மகாதேவன் கோயில் என அழைக்கப்பட்டமை
- இராஜேந்திர சோழனால் புனருத்தாரணம் செய்யப்பட்டமை.
- சோழர்காலத்துக்குரிய கலைவடிவங்கள்
- மூர்த்தி தலம் தீர்த்தச் சிறப்பு
- ஆறுமுக நாவலரால் தேன்பொந்து எனச்சுட்டப்பட்ட சிறப்புக்குரியது.
- மடங்கள் - உண்டியும் உறையுளும்
- சிவராத்திரி விரத வழிபாட்டுச்சிறப்பைக் கொண்டமைதல்.

**(10 புள்ளிகள்)**

**ஆ) கொக்கட்டிச்சோலை தான்தோன்றீஸ்வரம்**

- அமைவிடம் - மட்டக்களப்பு மாவட்டம் கொக்கட்டிச்சோலை
- வரலாற்றுச் சிறப்பு
- ஈழத்திலுள்ள தான்தோன்றீச்சரங்களுள் ஒன்று.
- கிழக்கிலங்கைத் தேசத்துக் கோயில்களில் ஒன்று.
- கல்நந்தி புல் உண்ட கதை உள்ளிட்ட ஐதிகக்கதைகள்..
- மட்டக்களப்பு மான்மியம், கல்வெட்டு நூற்பிரதி, மரபுவழிப் பாடல்கள், புலவர்மணி பெரியதம்பிப் பிள்ளையின் நூல்கள்.
- குளக்கோட்டன் திருப்பணி
- "தான்தோன்றி லிங்கம் வெற்றி புனை" குளக்கோட்டன் கல்வெட்டு
- மூர்த்தி தல தீர்த்தச் சிறப்பு.
- சங்கமர்களால் வழிபாடாற்றப்படும் சிறப்பு.
- நித்திய நைமித்தி வழிபாடுகளின் சிறப்பு

**(10 புள்ளிகள்)**

**08. பகவத்கீதை ஒரு வாழ்வியல் நூலாகும் மேல்வரும் விடயங்களை அடிப்படையாகக் கொண்டு பகவத்கீதை பற்றி விளக்குக.**

**அ) பக்திமார்க்கம்**

**ஆ) தன்னலமற்ற சேவை மார்க்கம்.** **($10 \times 2 = 20$ புள்ளிகள்)**

**அ. பக்திமார்க்கம்**

- தன்னலமற்ற அன்பு வழியால் உலகில் வாழ்க்கை சிறப்படையவும் இறை நிலையடையவும் வழிப்படுத்துகின்றது.
- ஆழ்ந்த இறைபற்று பக்தி என்பர் நாரதர்.
- புலனறிவுக்கு உட்பட்ட பொருட்களில் இருக்கும் பற்று அன்பாக மடைமாற்றம் பெறும் போது அது பக்தி என்று கூறப்படும். மணவாளர்
- அன்பே கடவுள், இவ்வுண்மையினை உணர்ந்து வாழ்க்கை நடத்துதலே உயர்ந்த வழி என பகவத்கீதை கூறுகின்றது.
- பகவத்கீதையின் 7 - 12 அத்தியாயங்கள் பக்தியோகத்தின் சிறப்பைக் கூறுவன.
- என் பக்தி இருவகைபபடும்.
  ஆசாரபக்தி / சடங்குகளோடு கூடிய வழியில் வழிபடுவது.

பிரபத்தி – இறைவனிடம் ஒருவன் தன்னை முழுமையாக அர்ப்பணித்தல். இதுவே சரணாகதி தத்துவம் என அழைக்கப்படுகிறது.

- "மாம் ஏவ சரணம் விரஜ" – பகவத்கீதை
- பிரபத்தியே ஆத்ம நிவேதனம் எனக்குறிக்கப்படல்.
- பக்தன் தன்னை முழுமையாக அர்ப்பணிக்கும் போதே இறைவனின் அருட்பிரசாதத்தை பெறும் வாய்ப்புக் கிட்டுகின்றமை.

**(10 புள்ளிகள்)**

**ஆ. தன்னலமற்ற சேவை மார்க்கம்**

- இந்து சமயம் வாழ்க்கை வாழ்வதற்கே என்ற கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டது.
- மனிதன் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வத்துள் ஒன்றுபட இந்துசமயம் மூன்று மார்க்கங்களைக் குறிப்பிடுகின்றது.
- அவையாவன கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் என்பனவாம்.

கர்மயோகம் – தன்னலம் கருதாத தொண்டுநெறி
பக்தியோகம் – சுயநலமற்ற அன்புவழி
ஞானயோகம் – பேரறிவு வழி ஃ பேருணர்வுவழி

- செயலைத் தொண்டாகச் செய்யும் கருமயோகம் ஒரு மனிதனை உலகியல் வாழ்வில் மேன்னைபெறவும் வாழ்வின் இலக்காகிய வீட்டின்பம் பெறவும் வழியாக அமைகிறது.
- கீதையில் கண்ணன் அர்ச்சுனனுக்கு கர்மத்தின் அவசியத்தனை எடுத்துக்கூறுகின்றார்.
- செயலின்மையை விட செயல் சிறந்தது.
- காமியம் – பயன்கருதிய வினை, நிஸ்காமியம் – பயன்கருதாவினை என இருவகைக் கர்மம் கீதையில் கூறப்படுகின்றது.
- பயனைப் பெறுதற்கு தன்முனைப்போடு செய்யப்படும் செயல்கள் மனித வாழ்வினைப் பலவீனப்படுத்துகின்றன.
- பலனில் பற்றுவைக்காது செய்யும் செயல்கள் மனித மனத்தைப் செம்மைப்படுத்துகின்றன.
- பேராசையுடன் செய்யப்படும் செயல்கள் ஒருவரை மயக்கமுறச் செய்கின்றன.
- கடமையுணர்வுடன் செய்யப்படும் செயல்கள் ஒருவரின் மனதை பிரபஞ்சநிலையில் பண்படுத்துகின்றன.

"உன்னுடைய வினைகள் உன்னைத் தளைக்காதபடி வினையாற்று"
"கடமையை கடமைக்காகவே செய்"

- இதனையே கீதை 'யோகம்' என்று சிறப்பித்துக் கூறுகின்றது.
- "கர்மாணி ஏவ அதிகாரஸ்து மா பலேசு கதாசன"
- கீதை கர்மத்தின் ஊடாக செயலில் துறவு எனும் கர்ம யோகத்தை வாழ்வைச் செப்பனிடும் வழியாகச் சிறப்பிக்கின்றது.
- செயலைத் துறத்தல் பிரபஞ்சநியதிக்கு, தர்மவிதிக்கு எதிரானது.
- செயலில் துறவு பிரபஞ்ச நியதியுடன் இணைந்தே செல்லும் வழி என்பதே கீதை கூறும் போதனை.
- மக்கள் சேவையே மகேசன் சேவை என வாழும் தன்னலமற்ற சேவையையே கீதை கர்மயோகம் என்று சிறப்பித்துக் கூறுகின்றது.

**(10 புள்ளிகள்)**